ஆயின் அது பெறும் வழி உள ஆயின் சிறிதும் அவ்வாசாரம் உண்டாகவும் கூடும் : எனவே கயவர்க்கு ஆசாரம் இயல்பு அல்ல என்றும் உண்டு எனின் அது கள்ளம் என்றும் பொருள் ஆயிற்று எ - று.

(ப - உ.) எ - து.—கயவர் ஆசாரம் உடையர் ஆதற்குக் காரணம் அச்சமே : அஃது ஒழிய ஒரு பொருண்மேல் ஆசை உடையர் ஆயின் அது காரணம் ஆகவும் சிறிது ஒழுக்கம் உண்டாம் எ - று.

இஃது இயல்பான் ஒழுக்கம் இலர் என்றது. (3)

கா. 4. ப. 7.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூர்ங்கைய ரல்லா தவர்க்கு.

(கா - உ.) எ - து.—பிறர் தம்பால் இரந்து கொள்ளும் இடத்து ஈரக் கை விதிர்த்தலும் இலர் கயவர் ஆனவர் : கொடிறு போல இடுக்கிப் பிடித்து உடம்பை உடைக்கும் திறமையால் கூரிய கையினை உடையோர் அல்லாத குணம் உடையவர்க்கு எ - று.

(ப - உ.) எ - து.—தம் கதுப்பினை ஒடிக்கும் வலிய கையினை உடையர் அல்லாதார்க்கு ஈரக் கையும் தெறியார்கள் கயவர் எ - று.

ஈரக் கை - உண்டு கழுவின கை. கூன் கை என்று பாடம் ஓதினும் அமையும். இஃது இரப்பார்க்குக் கொடார் என்றது. (4)

கா. 5. ப. 9.

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(கா - உ.) எ - து.—ஒருவர் வந்து தம் குறை சொல்ல அமையும் : மற்று இவ்வளவிலே பயன்படுவர் சால்பினை உடையோர். இனி மற்று இவ்வாறு அன்றித் தரித்தும் நெரித்தும் அடர்த்தும் சாறு கொள்ளும் கரும்பு போலப் பெரிதும் கொல்லக் கொல்லப் பயன்படுவர் அத்துணைக் கீழான கயவர் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் தம் குறையைச் சொல்ல அதற்கு இரங்கிப் பயன்படுவர் மேன்மக்கள். அவ்வாறு அன்றிக் கரும்பு பயன்படுமாறு போலத் தம்மை நெருக்கினால் பயன்படுவர் கீழ் மக்கள் எ - று.

இஃது ஒறுப்பார்க்குக் கொடுப்பர் என்றது. (5)

கா. 6. ப. 6.

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

(கா - உ.) எ - து.—முன் நின்ற நிலையினும் மேற்பட உடுக்கும் ஆடையும் உண்ணும் சோறும் சிறிது மிகுதக் காணின் மற்று அப்பொழுதே பிறரைக் கெடுப்பது ஓர் வடுக்காண வற்று ஆகும் கீழ் எ - று.

(ப - உ.) எ - து.—பிறர் உடுப்பதனையும் உண்பதனையும் காண்பார் ஆயின் அவர் மாட்டு உள்ள குற்றங்களை ஆராய வல்லர் ஆவர் கயவர் எ - று.

இஃது அழுக்காறு உடையர் என்றது. (6)

கா. 7. ப. 5.

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(கா - உ.) எ - து.—மனையினின்றும் புறப்பட்டாற் பட்டி புக்குப் பயிர் அழிக்கும் பட்டி மாட்டினை ஒத்தார் சிலரைத் தான் காணின், இதற்கு இவரினும் பெரியேன் ஆக வேண்டும் யான் என்று மற்று அவரது பட்டிமையினும் மிகப்பட்டு இறுமாக்கும் கீழ் ஆனது: எனவே தானும் நெறி கெட ஒழுகும்: பிற நெறி கேடரைக் காணினும் நமக்குத் துணையும் உண்டு என்று பெரிதும் இறுமாக்கும் கீழ் என்பது பொருள். அகப்பட்டி என்பது மனையுள் வாழும் பட்டி மாடு என்றது.

(ப - உ.) எ - து.—மனையகத்து இருந்து பறட்டை யாம் பெண்டிரைக் காணில் அவரினும் மிகப் பறட்டை ஆயினதனைப் பெற்றேம் என்று இறுமாப்பர் கயவர் எ - று.

இது நிறை இலர் என்றது. (7)

கா. 8. ப. 3.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(கா - உ.) எ - து.—நன்னெறி அறியும் சான்றோரினும் கயவர் சால நலம் பெரிது உடையர்: தமது உள்ளத்து யாதும் ஓர் இடர்

இலர் :. எங்ஙனம் எனில் நன்னெறி ஆகிய கல்வியும், அறிவும், ஆசாரமும், குலமும், தருமமும், தவமும், பிறவும் குறைபடாமல் கொண்டு மேற்பட வேண்டும் என்றும் குறைபடும் ஆயின் குடிமைக்கு அது வடு என்றும் இங்ஙனம் நெஞ்சம் அஞ்சி அவலிக்கும் அவலம் எஞ்ஞான்றும் இலர் எ - று.

(ப - உ.) எ - து.— நன்மை அறிவாரினும் கயவர் திரு உடையர் : இம்மை மறுமைக்கு உறுதி ஆவன செய்யப் பெறுகின்றிலோம் என்னும் கவற்சி நெஞ்சின்கண் உறுதல் இலர் ஆதலான் எ - று.

இஃது அறம் அறியார் என்றது. (8)

கா. 9. ப 8.

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(கா - உ.) எ - து.—ஒருவன் தான் வாய்க்கொண்டு ஒக்கடித்து உணர்ந்த தாளப் பகுதியைப் பிறர்க்கு அவ்வாறு உரைவழி புலப்படாமைக் குறிக்கொண்டு தன் கைகொண்டு அதன்கண் உற வைத்த இடத்து மற்று அஃது அதனை யாவர்க்கும் புலப்படச் சாற்றும் பறைக் கருவியை ஒப்பர் : என் எனில், ஒருவர் தம்மை நம்பி மறையை ஓம்பு என்று உரைப்ப மற்று அந்த மறையினை அடக்கல் ஆற்றாது அப்பொழுதே பிறர்க்குச் சென்று செவிக்குச் செல்லுமாறு அதனை விளங்கச் செலவு படுத்து உரைக்கும் தீமை உடையார் எ - று.

(ப - உ.) எ - து.— கயவர் அறையும் பறை போல்வர் : தாம் கேட்ட மறைகளைப் பிறர்க்குக் கொண்டு சென்று அறிவித்தலான் எ - று.

இஃது அடக்கம் இலர் என்றது. (9)

கா. 10. ப. 10.

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியார் விரைந்து.

(கா - உ.) எ - து.— கயவராய் உள்ளார் வந்து மருவினால் ஒருவர்க்கு இடுக்கண் வந்து உற்ற இடத்து மற்று அதுவே பட்டடை ஆக உயிர்க்கு ஈறு, பொருட்கு இறுதி வருமாறு விரைந்து எற்றுதற்கு

உரியார்: அஃது இயையாது எனின் உற்ற இடத்து உதவாது விரைந்து நீங்குதற்கு உரியார்: ஆதலால் எவ்வாற்றானும் கயவரொடு குடிப்பண்பு உடையோர் மருவாது ஒழிக என்பது பொருள் ஆயிற்று எ - று.

எற்றிற்கு என்பது எற்றுதற்கு என்பது: விற்றற்கென்பது வேறுபட்டு நீங்குதற்கு என்றது. வீற்றற்கு என்றபாலது விற்றற்கு எனக் குறுகி நின்றது:

(கா - உ.) பொருட்பாலினுள் வகுத்துக்கொண்ட பொருள் பகுதி ஆவது :—

"அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
திருவியல் வல்லாண மொன்றெண் — திருவிய
றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின் மூன்
றெண்பொரு ளேழ்பா னவை"

என இங்ஙனம் கண்டு கொள்க.

பொருட்பால் முற்றும்.

(ப - உ.) எ - து.—கயவர் யாதினுக்கு வல்லவர் எனில் தமக்கு ஒரு துன்பம் உற்றால் விரைந்து தம்மை விற்க வல்லர் எ - று.

இது நிலைமை இலர் என்றது.

பொருட்பால் முடிந்தது.

எழுதினது உதிரமாலை செட்டியார் குமாரன் அரிஹரபுத்திரன்.



# செய்யுள் அகராதி.

—:o:—

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 5 | 3 | வல்லார்க்கு | வல்லாற்கு |
| 9 | 27 | கற்கக் | கற்க |
| 11 | 17 | (சேர்க்க) பரி. பா - ம். "யொருவற்கு" | |
| 17 | 1 | கல்லாமை | கேள்வி |
| 24 | 23 | சொல்லுதல் | செல்லுதல் |
| 25 | 18 | தம்பால் | தன்பால் |
| 25 | 27 | யுய்க்கற்பின் | யுய்க்கிற்பின் |
| 26 | 19 | இவவள | இவ்வள |
| 28 | 33 | (சேர்க்க) பரி. பா - ம். "கேண்மை திறன்" | |
| 31 | 19 | பொதுபட | பொதுப்பட |
| 34 | 33 | துணையில்லைத் | துணையில்லை |
| 36 | 3 | துணிந்தபின் | துணிந்தபி |
| 39 | 2 | வரும். | வரும் |
| 40 | 33 | தோன்று | தோன்றுக் |
| 41 | 26 | எற்றார் | எறிஞர் |
| 50 | 32 | களரியி | களரி |
| 52 | 22 | உளதாம | உளதாம் |
| 56 | 8 | காம | காமம் |
| 58 | 5 | செய்கற்பாற் | செய்கிற்பாற் |
| 65 | 35 | கலிங்கர் | காலிங்கர் |
| 77 | 24 | முன்னிரை | முந்நிரை |
| 78 | 5 | குடிகட்டு | குடிகட்கு |
| 78 | 13 | யாதேர் | யாதோ |
| 85 | 21 | என்றுராயினும் | என்றாராயினும் |
| 85 | 35 | முதலிய | (நீக்குக) |
| 89 | 3 | அறிப்பாமல் | அறியாமல் |
| 95 | 8 | (கெடும்பொருள்)வருதலும் | கெடுதலும் |
| 95 | 36 | எள்றது | என்றது |
| 97 | 17 | டங்கிற்ற | டங்கிற்றன் |
| 103 | 27 | பாலும் | போலும் |
| 106 | 7 | வல்வவனே | வல்லவனே |
| 106 | 21 | மேமேல் | மேன்மேல் |
| 109 | 15 | (சேர்க்க) பரி. பா - ம். "அதினுட்பம்" | |
| 112 | 23 | காரியமும் | காரியம் |
| 112 | 26 | பட்ட | பட |
| 115 | 30 | (சேர்க்க) (உளர்) புறம் 252-செய்யுள். | |

1748



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 136 | 15 | வெளியோ | வொளியோ |
| 136 | 24 | யோடோ | யோடே |
| 151 | 3 | தாம | தாம் |
| 154 | 4 | ப. 9 | ப. 5 |
| 156 | 17 | யிறைவர்க் | யிறைவற் |
| 162 | 18 | திறனறித்து | திறனறிந்து |
| 164 | 3 | செணபொரு | கெண்பொரு |
| 164 | 8 | உண்டாக்கினற்கு | உண்டாக்கினர்க்கு |
| 170 | 26 | பொரு... | பொருட்டு |
| 174 | 27 | பாதுகாப்பர் | பாதுகாப்பார் |
| 184 | 14 | பெயின் | செயின் |
| 185 | 3 | பேதமை | பேதைமை |
| 196 | 26 | எறட்டு | ஏறட்டு |
| 198 | 3 | தாமடங்கா | தானங்கா |
| 198 | 11 | தாம் | தான் |
| 199 | 31 | பிறிதுயாது | பிறிதியாது |
| 201 | 29 | லொண்மை | ஞெண்மை |
| 206 | 7 | கருதிகொண்டு | கருதிக்கொண்டு |
| 218 | 6 | இல்லாதோரோடு | இல்லாதாரோடு |
| 225 | 15 | சகுதி | தகுதி |
| 227 | 3 | வேண்டு | (நீக்குக) |
| 228 | 8 | பொய்மை | பொய்ம்மை |
| 228 | 13 | ஷை | ஷை |
| 228 | 14 | புக்கவர் அப்பிணம் | புக்கு அவலப்பிணம் |
| 230 | 25 | கூறப்ட்டது | கூறப்பட்டது |
| 236 | 21 | தன் | தம் |
| 239 | 30 | விரும்பரது | விரும்பாது |
| 241 | 4 | மகுந்து | மருந்து |
| 244 | 12 | நெரிந்து | தெரிந்து |
| 245 | 15 | இயம்படுவது | இயம்பப்படுவது |
| 250 | 6 | இனிவரவு | இளிவரவு |
| 263 | 23 | உளபுக்கு | உள்புக்கு |
| 263 | 28 | மக்கள | மக்கள் |
| 266 | 10 | நகை | (நீக்குக) |
| 267 | 12 | ப. 0 | ப. 1 |
| 267 | 26 | ப. 0 | ப. 2 |
| 273 | 15 | சான்ஞேர்க் | சான்ஞேர்க்கஃ |
| 273 | 16 | கஃதிலரேற் | திலரேற் |
| 281 | 12 | துப்பிர | துப்புர |
| 282 | 19 | தனர்ந்து | தளர்ந்து |